

9 - MAY 1933

சேசு மரி சூசை துணை.

# கத்தோலிக் பாலர்பக்தி
# பஜனைகீர்த்தனங்கள்.



இஃது

முசிரி தாலூகா

தோளூர்ப்பட்டி கிராமம்

சவரிநாயகம் உபதேசியாரின் குமாரரும்

ஸ்கூல் மாஸ்டருமான

T. S. S. ஆரோக்கியசாமி அவர்களால்

இயற்றப்பட்டு



இதன் விலை] [ரூ. 0–3–6.

துறையூர்

...ா அச்சுக்கூடம்,

...933.

O6:417
N33
128325

# முகவுரை.

அன்பார்ந்த நேயர்காள்!

சில நண்பர்களின் வேண்டுகோளுக் கிணங்கி, என் சிற்றறிவுக் கெட்டியவாறு கத்தோலிக் பாலர் பக்திப் பஜனை கீர்த்தனங்கள் என்ற இச்சிறு பாடல் புத்தகத்தை எழுதத் துணிந் துள்ளேன். கத்தோலிக் கிறிஸ்தவர்களுக்கு இத் தகைய கீர்த்தனைப் புஸ்தகம் ஒன்று இருக்க வேண்டியது அவசியமாதலால் யாவரும் விரும்பிப்பாடிப் பஜிப்பது உசித மாகும். பாடகர்களுக்குக் கஷ்டம், சலிப்பு உண்டாகா வண்ணம் எளிய வர்ணமெட்டில் இயற்றி யிருப்பதோடு, ஒவ்வொருவரும் தாமே தெரிந்து கொள்ளுமாறு பழக்க வழக்கத்திலுள்ள வர்ண மெட்டுகளைக் குறிக்கப்பட்டிருக் கின்றன.

இப்பாடல்களில் இலக்கணம், இலக்கியம், இசைச் சொற்கள், அடுக்கு மொழிகள் முதலிய குற்றங்க ளேற் படினும், அவற்றைப் பொருட் படுத்தாது மன்னித்து, குணங்களை ஏற்று ஆசீர் அளிக்குமாறு கேட்டுக்கொள்ளு கின்றேன்,

1877
6954

இப்படிக்கு,

தங்களின் ஆசியைப்பெறும் நண்பன்,

T. S. S. ஆரோக்கியஸாமி உபாத்தியாயர்,





சேசு மரி சூசை துணை.

## கத்தோலிக் பாலர் பக்திப்

# பஜனைக் கீர்த்தனங்கள்.

### காப்பு.

பக்தியுடன் பாலருமைப் பணிந்திரஞ்ச வேயருளுங்
கத்தோலிக் காவலனே காப்பு.

### காப்பு - விருத்தம்.

மகிழுறுங் கத்தோலிக்கர் மாணவர் மனத்தி னித்தந்
திகழ்கோளுங் கீதமோன்று செப்பவு முகந்தே னுந்தன்
புகழடைந் தனந்தம் பேர்கள் போற்றுரா ரும்மையிப்பா
நிகழவே கிருபை செய்யும் நீதனே சேசு நாதா.

### அவையடக்கம்.

கரும்பெனச் சிறுவர்சோளக் கட்டையைக் கோள்வர் போலும்
துரும்புதாம் பெரிதேன் றெண்ணித் தூணையே பழித்தாற் போலும்
அரும்பென மாந்தர்நுணு வரும்பையே தொடுப்பார் போலும்
விரும்பியே பாட லுற்றேன் மேன்பிழை பொறுத்திடீரே.

---

### 1. தமதிரீத்துவதுதி.

நாதவிந்து கலாதி நமோநம என்ற மெட்டு,

தேவாதி தேவமுதலே நமோ நம
மூவுலகம் நிறைந்தாய் நமோ நம
தேடுவோர்க் கருளீவாய் நமோ நம — ஜெகஜோதி

தேவதிரீத்துவ நாதா நமோ நம
யாவரும்புகழ் போதா நமோ நம
ஆவியளித்த விநோதா நமோ நம — அருள்ஞான

பாவப்பேயை யுதைத்தாய் நமோ நம
பாழுநரகில் புகைத்தாய் நமோ நம
பாவிகட்காய் மரித்தாய் நமோ நம — பரலோகா

ஏவையின் பிழையைப் பொறுத்த தயாபரா
சாவைத் தலையில் விதித்த மனோகரா
ஏற்ற விதியை யளித்த வுபகார — கிருபாகரா

ஈகையைச் சுரந்த எம்பெருமா னாதி
என்று மழியா வஸ்துவென்பே னாதி
எந்தும் சூரிய இருதயத்தோ னீதி — எனைப்பாரும்

ஆவலாய்ப் பஜனைப் பாடுமுன் பாலரை
காவலிருந் தாளும் கடவுளே ஜெயஜெய
ஆசீர் பொழிந்தரு ளேக பொருளே — அதிவேக

ஆசைகொண்டு வும்மை அனுதினம் போற்ற
தாச னாரோக்கிய சாமிதுதி சாற்ற
வாச மலரடி வந்துபுக ழேற்ற — வரந்தாரும்

---

## 2. சேசுக்கிறிஸ்து துதி.

தேவா கருணை புரிவாய் என்ற வர்ண மெட்டு.

(பல்லவி)

வேதா கருணை புரிவாய்—சேசுக்கிறிஸ்து
நாதா கருணை புரிவாய்.

(அநுபல்லவி)

ஆதார மாக வுந்தன்
பாதாரம் நம்பு மெந்தன் — (வேதா)

(சரணங்கள்)

வா மரியின் புதல்
வா சத்திய முதல்
வா சற்சணர் குரு
வா ய் துலங்கு மெந்தன் (வேதா)

நீ தந்தையும் தாயும்
நீ வினை தீர்ப்பவர்
நீ வர மீவதும்
நீ தரிசன மாய் (வேதா)

மேல் பதியில் வளர்
மேல் துதிக்கு மினி
மே லாரோக்ய கீதம்
மேல் மன துகந்து (வேதா)

---

## 3. வேறு.

ஸ்ரீரங்கநாதன் துணையே என்ற மெட்டு.

(பல்லவி)

சேசுக்கிறிஸ்து துணையே—பரி
சுத்த ரெவர்க்கும் பலன்
முத்தி யருளுந் திரு (சேசு)

நீச னெனது வாவி பாச மாகுதே தாவி
நெறியிழுந் தலைந்திடும் அறிவிலி சேயனைப்
பிரியமுற் றேந்திடு மூரியபிதா வின்சுதன் (சேசு)

(சரணங்கள்)

பொங்குந் திருமறை புவிதனி லோதிய
போற்றிடு மாந்தருக் கேற்றவ னுதியே
மங்கள் மரிவயிற் றுதித்தநற் சோதியே
மனுக்களுக் குயிரைத் தந்தருளிய நீதியாஞ் (சேசு)

நித்தமு மருள்பொழி நீடுழி பானும்
நேமிலு யிற்றெழுந் திட்டவற் புதனும்
பக்த ஞரோக்கியம் பணியுந்தே சுதனும்
பாடிப் பஜிப்பவர்க் கேசுகா தானும் (சேசு)

---

## 4. வேறு.

ராமபஜனே ஹோதியாம் என்ற மெட்டு.

(பல்லவி)

தேவதத்துவ நாதனே—தெய்வ லோகனே
தேவதத்துவ நாதனே.

(சரணங்கள்)

பூவி லவதரித்த பொருளே ஜெகாரக்ஷகா
பாவியைக் காருமையனே தெய்வ லோகனே (தேவ)

எம்முடை குறைநீங்க செம்மறி யதுபோல
இரத்தஞ் சிந்தின தேவனே தெய்வ லோகனே (தேவ)

குப்பையில் கோமேதகம் மங்கையில் மாணிக்கமாம்
ஒப்ப மாடடை யுதித்தாய் தெய்வ லோகனே (தேவ)

மன்னர்கள் மூவர்வந்து மாட்சிமை யாய்தொழுக
பின்னும் ஒளியைக் காட்டினுய் தெய்வ லோகனே (தேவ)

தாழ்ந்த துயர்ந்த தங்கம் தத்வம் நிறைந்த சிங்கம்
தரையெங்கும் நிறைந்தோனே தெய்வ லோகனே (தேவ)

சேசுவின் திருநாமம் வீசுதே ரோஸ் மலர்போல்
ஆசித்து வந்தோமே தெய்வ லோகனே (தேவ)

பாடும் பக்த ஞரோக்ய சாமிகவிக் கருள்செய்
பரனே மரியின் சுதனே தெய்வ லோகனே (தேவ)

---

## 5. வேறு.

தானுவெங்குந் துலங்கிடலாச்சு என்ற மெட்டு.

(முடுக்கு)

1. தானு யுல கை சிருஷ்டிக்க லாச்சு
தத்துவ தேவனின் சித்தமே லாச்சு
கோனுய் மரிவயிற் றுதித்திட லாச்சு
குவலயத் தோருமைத் துதித்திட லாச்சு
பாலனே—நச ரேசு
பாலனே.

2. மகிமை யளிக்க வந்துதித்தீரே
மாடடைக் குடில் பெரிதாய் மதித்தீரே
திகிலடை வேந்தருக் குடு வளித்தீரே
திருச்சபை யோர்களுக் கருள் புரிந்தீரே
பாலனே—நச ரேசு
பாலனே.

3. ஒற்றுமைக் கொடியினை உலகினில் நாட்டினீர்
உயர்சீனு மலையிலுன் னுரு திரு காட்டினீர்
தெற்றென நீரதை ரசஞ்செய்து வூட்டினீர்
தேவ கிருபையா லிருதயம் மூட்டினீர்
பாலனே—நச ரேசு
பாலனே.

4. நற்கதி யென மனம் நாடியே ஓடல்
நத்தியே உத்தம திருச்சபை கூடல்
சற்குரு வெனவுமை இருதயந் தேடல்
தாச னுரோக்கிய சாமி சொற் பாடல்
பாலனே—நச ரேசு
பாலனே.

---

## 6. வேறு.

போதாதிருக்கூடல் பூமிநாதா என்றபாடலின் சந்தம்.

1. பாரோர் புகழும் மூவான நாதா—எம்
பாவம் போக்கவந்த சேசுநாதா
தீரா வினைகளைத் தீரும் வேதா—உம்மைச்
சிந்தித்திருப்போர்க் கருள்விநோதா

2. பெற்ற பிள்ளை வூமை யானாலும்—வேறு
பிரித்து வெறுப்பாளோ தாய் நாளும்
நற்றமிழறியாத போனாலும்—நான்
நவிலுவதை யேற்றுக் கொள்மேலும்

3. பிறந்தோரெல்லாரும் ஓர் நாளிறக்கப்
பிந்தாது சத்தியந்தான் காக்க
திறந்தீரே பத்துக் கற்பனை யாக்கத்
தீய பசாசையுந் தான் போக்க

4. தேடிடு முன்பாதமே பாக்கியம்—கண்டு
தெரிசித்தவர்க்கே தேவ வாக்யம்
பாடிடும் பக்தன மாரோக்கியம்—தமிழ்
பார்ப்போ ரெல்லாருக்குமே ஸ்லாக்யம்

---

## 7. வேறு.

திருவாவினங் குடியிலே என்ற மெட்டு.

(பல்லவி)

திருமாமரி யம்மன் பாலனே—புவியோர் கொண்டாடும்
திவ்வியேசு வென்னும் சீலனே

(சரணங்கள்)

தேவதிரீத்து வத்தின் திருப் பரம ரகசியத்தை
பூவுலகோர்க் களிக்கப் பொறுமையுடன் வந்துதித்த

(திருமாமரி)

மாட்டுக் கொட்டலில் பிறந்து மகிமைபெற்ற மாணிக்கமே
கேட்டுவரம் பெறவேகெஞ்சி நின்றோம்காணிக்கையாய் (தி)

முப்பதாண்டு வரையில் முழுமனதாய் கீழ்ப்படிந்தீர்
தப்பாமலாதிபிதா சத்திய மென்றோதி வந்தீர் (தி)

மாண்டவரையுங் காத்தீர் மாருதபுதுமை செய்தீர்
தூண்டா விளக்கினது சுடரொளிபோற் றுலங்கிவந்தீர் (தி)

பாவிகட்காய் சிலுவைப் பாரம் சுமந்து நொந்தீர்
பட்சமுடனே உந்தன் பரிசுத்த உயிரைத் தந்தீர் (தி)

நாள்மூன்றிலே யெழுந்து நாற்பதில் மேலாயமர்ந்து
ஆள்மூன்றை ஈரைந்ததில் அர்ச்சிக்கவே யனுப்பிவைத்த (தி)

பாலனாரோக்கிய சாமிப் பாடும் பாவில் குடியிருந்து
ஞாலமதிலே வோங்க நற்கிருபை செய்வுகந்து (தி)

---

## 8 வேறு.

மீனாட்சி ரம்மண என்ற மெட்டு.

(பல்லவி)

மாமரியாள் சுதனே—மனு ரூபனே கன்னி
மாமரியாள் சுதனே

(அனுபல்லவி)

பூமியில் பிறந்தீர் புதுமையிற் சிறந்தீர்
போற்றினோம் பதமலர் தூற்றினோந் துதிமிக
சாற்றிடு மைந்தரை ஏற்றிடும் மாசில்லா (மாம)

(தொகையரு)

ஐத்தப்பங் கொண்டு ஐயாயிரம் பேர் பசி
யாற்றி ரக்ஷித்த தேவா
மைந்தர்கள் பவ மற மரியாளின் வயிற்றினில்
வந்து விண் சென்ற தேவா

(அநுபல்லவி யெடுப்பு)

மகிமையுடன் சீனு மலைதனில் காட்சி தந்தாய்
மதுவென மறைதனை சதமுடனருளினீர்
பதி பெறவுமதொளி இதமுடன் பெய்திடும் (மா-ம)

(தொகையரு)

தாழ்த்திடும் வாழ்கை ஏற்றிடுந் தவத்தை
தரும் வீடு என்றீர் நீரும்
தட்டுங்கள் திறக்கும் கிட்டுங்கள் கொடுக்கும்
சத்திய மென்றீர் காரும்

(அநுபல்லவி யெடுப்பு)

தொண்ட ஞரோக்கியசாமி சொல்லுந் தமிழைப்பூமி
சுவை தித்திப்பிதுவென நவமணி யொளியென
புவனமதறியவுன் னருள்பொழிந்தெமை யாளும்
(மாமரியாள் சுதனே)

---

## 9. அர்ச் தேவமாதா.

பாண்டியனீன்ற மீனாட்சி என்ற மெட்டு.

ஆண்டிடும் தேவனின் தாயே—மரியெனும்
ஆரோக்கிய தாயே
வேண்டிடுஞ் சேயர்களின் தூயே—நின்சுதனுல்
வேண தளிப்பாயே

173225

(தொகையறு)

ஆழிசூழுலகிலும் ஆண்டவர் ஸ்தலத்திலும்
ஆனந்த ராக்கினி நீயே
நீள்புவி தனிலெங்கள் ஊழ்வினை தன்னைப்போக்க
நிமலனை வேண்டுவாயே

(பாட்டு)

தோஸ்திரப் புரிந்தோம் பூமீது —மாசகற்றித்
துணை செய்தாவீது
கோஸ்திரம் தெரிந்துதித்த போது—பாவியெமைக்
காருந்தப்பாது

(தொகையறு)

வேள்நகர் பதியிலும் லூர்துமா கெபியிலும்
விணோர் மணோர் புகழ்ச்சிறந்தாய்—எமக்கு
மாள்வரும் போதினில் தாழ்வுடன் வீடேற
மனுமகன்றனை யிரந்தாய் "(உம்மை)

(பாட்டு)

வாழ்த்திேனாம்" ஆரோக்கிய சாமி —யின்புகழ்ச்சொல்
வழங்கச்செய் பூமி
தாழ்த்திேனாம் பவமதை நேமி —லுன்றயையை
தாசர்முன் காணமி (ஆண்டிடு)

---

## 10. வேறு.

கந்தா காருண்யனே என்ற மேட்டு.

கன்னி மாமரியே சுதன் தாய்மரியே

(தொகையறு)

கற்புமிகுந் தற்புதமா—யுற்பவித்த சீலியே
தொற்புவி மனுவை மேற்கரை சோத்திடும் பரிபாலியே

(பாட்டு)

சூசை மாதவனின் மணவாளி நீயே
ஆசை தேவனுக்கே சற்குமாரி நீயே.

(தொகையரு)

சுந்தர மிகுந்த தேவகு—ணகரிம னோகரி
மைந்தரையனு தினமுங் காத்திடமகிழும் நேசதயாபரி

(பாட்டு)

பூவில் மாணிக்கமாய் விளங்கும் மணியே
தேவ கானிக்கையா யுதித்த கனியே.

(தொகையரு

தூயபரிசுத்த மானதிருதேவ—நாயகி எனையாதரி
பேய்பசாசை விரட்டியோட்டிடும்
பெருமைவாய்ந்த தயாபரி

(பாட்டு)

முல்லைப் பூவாசமே எங்கும் ப்ரகாசமே
எல்லையோ நிசமே இதைவிட வாசமே.

(தொகையரு)

சதுரபுவன மதோர்கள் நித்திய நாடடையக் கோருமே
மதுரசங்கீதம் பாடுமாரோக்ய சாமிதமிழைக் கண்பாருமே.

(பாட்டு)

கன்னி மாமரியே சுதன் தாய்மரியே.

---

## 11. வேறு.

சூழ்ந்த சர்க்கார் என்ற மெட்டு.

பாலர் கூடிப் பக்தியால் பஜனை பாடுவோம்
ஞாலமீதினில் தேவா வுன்தயை
ஞாயமுடன் வந்து செய் செய் செய்

..ாய் மரியின் பாதம் தொழ சூழ்ந்து வந்திடுவோம்
தா ததிங்கின தோமென தினம்
சங்கீதம் பாடுவோம் நாம் நாம் நாம்

ஆகம் ஏவாள் அடைந்திட்ட ஜென்ம வினையிதுவே
ஆண்டவனை தினம் வேண்டிவரும் திரு
அன்னையாம் கன்னிநம் தாய் தாய் தாய்

மனுக்குலத்தின் மாதவாய் விளங்கும் திருமரியே
மாந்தர் கரைபெற மேந்தயையுறும்
மாபெருங் கடவுளின் தாய் தாய் தாய்

மதிமிதித்த வானோரின் தலைமை ராக்கினியே
மாட்சியாயீ ராறு வுடுவை
மலர் முடிசூடிய தாய் தாய் தாய்

அனையைத் துதித்தோம் ஆரோக்கியசாமி சொற்புகழால்
ஆசீரளித்துன் நேசப் பெருக்கை
அடியவரடைந்திடச் செய் செய் செய்

---

## 12. வேறு

கலிலோ என்றவர்ணமெட்டு.

(பல்லவி)

மரியே—உனதிருவடி தினந் துதிப்
போர்க்கருள் தனைபுரியே
தயைபுரியே (ம

(அநுபல்லவி)

தெறியே வருத்ததுவுமென் குறையது
நிக்ஷய முயிர் துறந்தார் மூன்றும் நாள்
தக்ஷண முயிற்றெழுந்தார் மானிடர்க்கு
பக்ஷமாயாசீர்புரிந்தார் உமதுசுதன் (ம)

(சரணம்)

புவியோர்களுக் கனுதினம் பரமனே
புகழ்ந்து மன்ருடுந் தாயே எமையறிந்து
மகிழ்ந்து நின்றுதவுந் தூயே
மனேகரியே (ம)

கவியாலுன் மகிமையெங்கும் பரவ
கருதினேன் ஆரோக்கியம் தங்கமென
நிறைவினேன் வைராக்கியம் சிரம்பட
பணிவதே மிகயோக்கியம் நித்தமும்
கொண்டாடி யுமை மன்ருடி யருள்
கொள்வேன்திருப் பாக்கியம்.
பரமகன்னி (ம)

---

## 13. அர்ச் சூசையப்பர்.

தேவனே இந்தப் பாவியையென் என்ற மேட்டு.

(பல்லவி)

சூசையே உந்தன்நேச பதந்துணையே—முனி
சூசையே உந்தன்நேச பதந்துணையே—பாவச்
சுழலாகிய வழலானதில்
முழுகாமலே வொழுக வருளுன் (நேச)

(அநுபல்லவி)

பாச மிகுந்துந்தன் வாச மலரடி
பணிந்தோந் தலை குனிந்தோந் தொழத்
துணிந்தோம் மகிழ் வடைந்தோ முந்தன் (நேச)

(சரணங்கள்)

கன்னி மரியாளுக் கான பத்தாவானீர்
கர்த்தரான யேசுக் குற்ற பிதாவானீர்

இன்னுல கோர்களுக் கேற்ற துணையானீர்
எந்நேரமு முன்னுவலே
பின்னே நிலை சொன்னே முந்தன் (நேச)

புண்ணிய குணத்தின் பொருள்நிறை தங்கமே
போற்றுங் குடும்பத்தின் முன்னின்ற சிங்கமே
தன்மையா யும்மால் தளருதென் னங்கமே
தத்தத்தோம் தகர்தாமென
நித்தமுனை நத்துவோ முந்தன் (நேச)

நேசானவெம்மை நித்தமுந் தூண்டிடும்
நேமிலேவை பிழைக் காக மன்றுடிடும்
தாசனு மாரோக்கிய சாமியை யாண்டிடும்
தடுமாறியுன் னிடமாகவந்
திடவாதரித் திடுவாயுந்தன் (நேச)

---

## 14. வேறு.

சோம சேகரனருளும் என்ற மெட்டு.

தேவ புகழோங்குஞ் சூசை நாதா நாதா—உந்தன்
சேயர்கள்மீதன்பு கொள்ளும் தாதா தாதா—திரு (தே)

உத்தம குலத்துதித்த எந்தாய் எந்தாய்—எமக்கு
நித்தமுந் துணை புரிய வந்தாய் வந்தாய்—இந்த
எத்திசை விளங்கும் ஞான தந்தாய் தந்தாய—உந்தன்
பத்தர் மேலிரங்குமருள் சிந்தாய் சிந்தாய்—என்றும் (தே)

கோடிபிழை செய்தேனுனோர் பாவி பாவி—இதோ
தேடியும்மை வேண்டினேனே கூவி கூவி—பதம்
நாடி பரன் போதனையைத் தாவி தாவி—தினம்
பாடிப் பஜிப்பேனே யிந்தப் பூவில் பூவில்—மகா (தே)

பூமலரா லோங்குந்தேவ பக்தி பக்தி—அதை
நேமிலுளோர்,கண்டால்கொள்வர்முக்திமுக்தி—உந்தன்
நாமமது எம்மனத்தில் நத்தி நத்தி—ஆரோக்கிய
ஸாமியிதை புகலுவதும் புத்தி புத்தி—என்றும் (தே)

---

## 15. அர்ச் செபஸ்தியார்.

கருவினுருவாகி வந்த என்ற மெட்டு.

ஆதிபிதா மோயீசனுக் கோதி வைத்த கற்பனை மண்
மீதிலேயது மாந்தருக்கு—முறையாக
ஆனவழிதானடப்ப காணுமிதை யாருமொப்ப
அர்ச்சயமாய்த் தான் விளங்கும் —அமலனே
நீதியிது வாகும் சத்ய வேதமும் மெய்யாகும் நித்ய
போதக மொழிபு கன்றீர்—பலநாளாய்
நீணில் வெகு மாந்தர் ஞான—ஸ்நானம் பெற மகிட்சியான
நின்னறிவை யூட்டினதோர்—புண்ணியனே
வேத மந்திரோபதேசம் போதித்ததைஞ் ஞானி ராஜன்
வேணதாய் சிறை யிருத்தி—வெகுவாக
வேதனை துன்பமியற்றுங் காலை எமைக் காருமென்றும்
விண்ணவனைத் தோஸ்தரித்த—விமலனே
சோதி பானும் மகிழ பூதலத்தோர்கள் புகழ
துய்யபரன் சந்நிதியில்—அர்ச்சிய சிஷ்ட
துலங்கும் பொன்முடி சிரத்தி லிலங்குஞ் சாட்சி கொடிகரத்தில்
சொர்ண மயமாயொளிக்குஞ் செபஸ்தியாரே.

---

## 16. வேறு

(வெள்ளிமலை யொத்தபலமேடை என்ற மெட்டு.)

தேவப்பிரசாதத்தை யுண்டோனே—எங்குஞ்
செபஸ்தியெனும் பெயர் கொண்டோனே—பூவில்
தேவனுடபோதனையை யாவலுடனேதிடவு
மானீர் தயை யானீர்

உரோமைத்தியோக்கிலீனுஸ் ராசன் உம்மை
உயிர் கொல்லக் கொண்ட கோபாவேசன் என்னும்
ஊமைசெவிடர் குருடர் நோய்பல பிணியாளரைத்
தீர்த்தீர் வேதஞ் சேர்த்தீர்

சத்தியவேதாந்தனக்காய் முந்தி—யுந்தன்
சரீரமடியால் ரத்தஞ் சிந்தி —யுடன்
சடுதி மரிந்து மோட்ச முடியை யணிந்த எங்கள்
தாதா வேத போதா

காத்தருளவேணுமென்று —நம்பி; வந்தோம்
கைவிடாதாளுந் தங்கக்கம்பி—யென
காசினியோர்கள் முன்னே—வீசுமமலரே சொன்னேன்
காட்சி வேத சாட்சு

எந்தையே செபஸ்தியெனும் முனியே —உம்மை
ஏகோபித்தடிபணிவோ மினியே —நீளும்
இந்தரையில் வாந்தி சூரி ஏவல்பிணி பேயலகைப்
போக்கும்—எமை —காக்கும்

வாசயேமிகுந்திலங்குஞ் சிங்கமே —சற்றும்
மாறிடாதுயர் நிறைந்த தங்கமே —விசு.
வாசன் நேசனாரோக்கியசாமியையாளுந்தன் நாமம்
பொங்குமே—புவி—எங்குமே.

---

## 17. வேறு.

சோமசுந்திரனே என்ற மெட்டு.

காரும் செபஸ்தியரே—நின்
காலை மீதிவ் வேளை மேவிக் (காரு)
பாருங்கண்ணுலாசையோடு பணியுமாந்தர்க்காக வீடு
சேரும்வழி தன்னைத்தேடும்
சிந்தை கொள்ளும் மந்தை தன்னைக் (காரு)
தேகம்நொந்து பாடுபட்டு சேசு நாமத்தாலுயிர் விட்டு
தேவபாதந் தன்னைத்தொட்டு
சிறந்து விளங்கும் நிறைந்த எம்மைக் (காரு)
பேய்பசாசை யோட்டித் தீர்க்கும்
பிணிவியாதி யாவும் போக்கும்
தாயைப்போல நிதமும் காக்கும்
தாணி எங்குமே பிரபல சிங்கமே (காரு)
சேயனுரோக்கிய சாமியின்
செந்தமிழைக்காரும் பூவின்
மாய்கையாவும் விலக்கும் நீதன்
மகிமை சொரிந்து புதுமை புரிந்து (காரு.)

---

## 18. அர்ச் அந்தோனியார்.

பாலை வாய்க் கமுகில் என்ற மெட்டு.

1 கற்பு மிகுந்திப்புவியி லற்புத மெனவிளங்கும்
கன்னிமை நிறைந்ததிருமெய்யனே —கதி
யுன்னியே வுயர்வடைந்ததுய்யனே
கனத்தவங்கிஷம் மனத்தினினையாது
வனத்தின் றவசை நினைத்தமர்ந்த
காசினி புகழும் லீலிவாசமே —உம்மை
நேசியே வணங்குவோஞ் சந்தோஷமே

வெந்நீரில் பிள்ளை விழுக பன்னீரில் போலே குளிர
விந்தையை புரிந்த அந்தோனிமுனி —உந்தன்
மைந்தர்கள் மீதன்பு கூர்ந்திடு மினி
வெட்ட வெளியில் மட்டற்ற மழையகப்
பட்ட மடந்தையை முற்றுங் காத்திட்ட
வெய்யோனொளி போற்றுலங்கும் வேதனே—இந்த
வையதில் புதுமைபுரி நீதனே

3 மச்சங்களுக்குச் சிதமாய் நிக்ஷய முபதேசித்த
மாசில்லாத வத்தினின்ற ஞானவா—புவி
வாசிகளுக்கேற்ற துணையானவா
மகிமைபரனுங் கன்னிகையின் சுதனுமு
லகினுரக்ஷக—ளுகு மேசுவை
மங்களமாய்க்கையில் பெற்றயோகனே—தினம்
எங்கள் முகம் பார்த்தருள் தியாகனே

4 காணுமற்போன பொருளைக் கண்டுமே களித்திடவும்
காட்சியா யூமையைப் பேசவாக்கினீர்—தேவ
சாட்சியாய்க் குருடர்பிணி நீக்கினீர்
கந்தமலர்ப்பதம் வந்து துதித்தன
முந்தன்று ணையளித் திந்தகாலையில்
காதலா யாள்வா யாரோக்கியசாமியே—பால
ரோதவே மகிழுங் கண்பாரிப் பூமியே.

---

## 19 அர்ச் சவேரியார்.

அருட்கடல் ஞானனந்தந் ததும்புதே என்ற மெட்டு.

தேன்மாரி யுந்தன் நாமம் வீசுதே—சேவியரே
திருப்பாதந் தோஸ்தரிக்கக் கூசுதே
தீயனுன் பாவினுன் நோய்பிணி யாளன்னுன்
சேயைக் கண்ணோக்கிடுந் தேசிகனே

(தொகையறு)

திருவருள் சோதியின் அருட் பிரகாசமாய்
திசையெண்ணுஞ் சொலிக்கும் குருவே
இருவுலகானதிலுன் அரும்பெயர் விளங்கிட
இருந்த எண்ணம் மறந்த திருவே

(பாட்டு)

இராட்சியம் புனற் குமிழி
இருதயங் தரும்பதவி
இஞ்ஞாசியார் வாக்கை மேற்கொண்டவா (தேன்)

2

பாவியுன் பின்னடக்க வறிகிலே னுன்றுழைத்துதி
பால னுரோக்கியசாமி புரிகிறேன்
பதிமலாதனில் மரித்து பாவை பவணிகொடிவிரித்து
பட்டினமாம் கோவா தனில் சிறந்தீர்

(தொகையறு)

பையூரினு தித்திந்தப் பொய்யூரின் மாய்கையகப்
பட்டிடநீர் பார்க்க நன்றே
மெய்யழியாப் பாக்கியத்தை நீரடைந்திட நான்
மேன்மையை யடைவதென்றே

(பாட்டு)

பணிந்தனம் பணிந்தனம்
பணிந்து போற்றினம்
பாலர் பஜனைக் கனுகூலனே
(தென்மாரி யுந்தன் நாமம்)

---

## 20. வேறு.

துலங்குஞ் செம்பொன் என்ற மேட்டு.

விளங்குஞ் செழுநகர் கோவையிலமர்ந்த
வேதாந்த சிஷ்டகுரு
விமலசேவியர் முனியே துணைபுரிவாய் (விமல)

விரித்துரையால் மன மீடுபடச் செய்த
வேதாந்த சிஷ்டகுரு
விமலசேவியர் முனியே துணைபுரிவாய் (விமல)

விரிகொடி கடலினி லதிபுதுமை புரிந்த
வேதாந்த சிஷ்டகுரு
விமலசேவியர் முனியே துணைபுரிவாய் (விமல)

மிகுமணமு மதுடலிடரிலே சுடர்படும்
வேதாந்த சிஷ்டகுரு
விமலசேவியர் முனியே துணைபுரிவாய் (விமல)

விண்ணவர் மகிழ்ந்திட விந்தியர் புகழ்ந்திடும்
வேதாந்த சிஷ்டகுரு
விமலசேவியர் முனியே துணைபுரிவாய் (விமல)

வாக்கியந் துலங்கவா ரோக்கிய கீதம்
வாழ்ந்து பெருகச்செய்யும்
விமலசேவியர் முனியே துணைபுரிவாய் (விமல)

---

## 21. அர்ச் மரியமத லேனம்மாள்.

முத்துக்குமரையனே பாடி என்ற மேட்டு.

(பல்லவி)

மரிய—மதலேனேயே வுந்தன்
மைந்தரைக் காப்பாயே (மத)

(அநுபல்லவி)

அரிய குணத்தினளே அடிமையைக் காத்தாளே
திரிமுகம் புகழ்கொள்ளும் தெய்வப் பத்தினியாளே (மத)

(தொகையரு)

மனித சஞ்சாரத்தின் மாய்கையி லகப்பட்ட
மாது சிரோண் மணியே
இனிதாகத் தஞ்சமே எனவுனைக் கெஞ்சவே
ஈந்திடுஞ்சகாய மினியே

(அநுபல்லவி எடுப்பு)

சேசுபாதந் தொழுதாய் செய்பாவத்துக் கழுதாய்
நீசியறியே னென்றாய் நீணில்ரத்தக் கண்ணீர்விட்டாய் (மத)

(தொகையரு)

மனுமகன் சிலுவையில் மரண மடைவரை
மனதுருகி நீர்சொரிந்தாய்
கனமுட னுயிற்றெழ கடவுளின் திருப்பர
கதிபெற தவம்புரிந்தாய்

(அநுபல்லவி எடுப்பு)

பத்தர் பிழைபொறுக்க பாமனை வேண்டுவாய்
உத்தம வழிதனில் ஊன்றவே தூண்டுவாய் (மத)

(தொகையரு)

தெரியாதிந்நாள் சேயர்கள் செய்த
சிறுபிழை கோடாகோடி
நெறிதனையறிந்து நினதுதவிபெற
நித்தமுன் பாதந்தேடி

(அநுபல்லவி எடுப்பு)

பாலர்பலரும் வந்தெம் பாவத்துக்காக நொந்தோம்
தாலமதி லாரோக்கிய சாமி கிகமுகந்தோம். (மத)

---

## 22. காவல் சம்மனசு.

ஆண்டிப் பண்டாரம் என்ற மெட்டு.

(பல்லவி)

தேவதூதனே—பாது
காவல் தூதனே சரணம் (தேவ)

(சரணங்கள்)

ஆவலாயென்னருகில் அயராமலெத்தினமும்
பாவமணுகிடாமல் பத்திரமாய்க் காக்கும் நித்திய (தேவ)

ஏவைதனை மோசித்த ஈனவலகை தன்னை
மேவாதகற்றி யெம்மை மேன்மையுடன் காக்கும்
[நித்திய (தேவ)

தீயநரகினுக்குச் சேயாக வேண்டாமென்றும்
மாயவழி வெறுத்து மகிழும்மோக்ஷத்திற் சேர்க்கும் (தேவ)

அந்திசந்தி ஜெபதபங்கள் முந்திப் புரியுமென்று
சொந்தமுடன் பகர்ந்த தூய நீதி சோதியான (தேவ)

பிந்திவருஞ் செயலைப் பேணவே முன்னமதாய்
பெற்ற பிள்ளையைப்போல பேதைநானறியச்
[செய்யும் (தேவ)

பண்ணும் பாவச்செயலால் பாழுந்நரகமென்றும்
புண்ணியம் மிகுந்திருந்தால் புகழும் மோட்சந்தா
[னென்ற (தேவ)

உம்மோடு மோக்ஷமதில் என்னையமரச் செய்து
உம்பரன் றன்னைநேரில் ஓயாமகிழச் செய்யும் (தேவ)

பூவிலிருக்கமட்டும் புண்யவழியை யூட்டும்
தாவி மரிக்கும்போது தாராளமாய் மோட்சங்
[காட்டும் (தேவ)

கீதம் டி. எஸ். எஸ். ஆரோக் கியசாமி பாடினேனே
நீதமா யுந்தன்பாதம் நித்தமுவந் தேடினேனே. (தேவ)

## 23. நமது கடமை.

ஆத்துப்பாலத்திலே என்ற மெட்டு.

தேடுவோம் தேவனைக் கூடுவோஞ் சங்கீதம்
பாடுவோம் நேசர்களே —மனதுகொண்டு
நாடும் விஸ்வாசர்களே

வீடுபெற வாவி கூடு பிரியாமுன்
நீடும் வழி நோக்குவோம் —துரிதமுடன்
கேடுபழி போக்குவோம்.

பத்துநெறி தன்னைப் புத்தியி லேற்றியே
நத்தி நடந்திடுவோம் —உண்மையானல்
முத்தி யடைந்திடுவோம்.

எத்தனை சோதனை பித்தனை வாதிக்கின்
ஒத்து உழைத்திடுவோம் —பலனளிக்க
அத்தனைக் கூவிடுவோம்

போற்றி மலர்தன்னைத் தூற்றித்துதிமிகச்
சாற்றிப் பணிந்திடுவோம் —எண்ணிமனந்
தேற்றித் துணிந்திடுவோம்

தூற்றி எடுதூசி காற்றிலலைவிடா
தாற்றிக் கொள்ளத் துதிப்போம் —சுகமாய்
வீற்றிருக்க மதிப்போம்.

வேதத்திலே வேத போதத்திலே தேவன்
பாதத்திலே வேண்டுவோம் —நாளும் பஞ்ச
பூதத்தையே தூண்டுவோம்

நீதத்திலே பிடிவாதத்திலே நன்வி
நோதத்திலே நோக்கமாம் —நம்மிருதய
சாதகத்தே யாக்கமாம்

காலைமாலை ஜெபமாலை செய்துதப
மேலே சிறந்திடுவோம் —வேதகுரு
போல புரிந்திடுவோம்

பூலோக மாய்கையினாலே சிக்குண்டிட
லாகாதிது வுண்மையே —வெறுத்திடில்
காலமெல்லாம் நன்மையே

நேமில் பிதாச்சுத னுமிஸ்பிரீத்து சாந்து
நாமமதே தெய்வமாம் —பரிசுத்த
ஆன்மா துதி செய்யுமாம்

பூமியி லாரோக்யசாமி சொற்பா யோக்கியம்
நேமித்ததே வாக்யமாம் —சங்கீதத்தை
காண்மித்ததே பாக்யமாம்

---

## 24. வாழி.

இசைந்து யேறும் என்ற மெட்டு

பரந்த வுலகம் படைத்த உயர்திரு பரன்வாழி
பரம கன்னிமரி வயிற்றிலுற்பவித்த சுதன்வாழி
நிறைந்த பாப்புவும் மேற்றிராணி குரு கன்னிகைவாழி
நீள் திருச்சபையினர் ஊழ்வினையறவே நிதம்வாழி
சொரிந்த பாவர்பக்தி சங்கீத சுரம்வாழி
தோழ னாரோக்கியசாமி சொற் பாடலும் மிகவாழி
விரைந்து படிப்போர் கேட்போர் யாவருந் தான்வாழி
விஞ்சையாய் ஜனோபகார பிரசுரம் தினம்வாழி

---

178325

## 25. மங்களம்.

இங்கிலீஷ் நோட்டு.

ஜெய ஜெய மங்களம் மங்களமே
ஜேசுக் கிறீஸ்துவின் சங்கீதமே
நயந்தரு மாமரிக்கே ஜெய மங்களம்
நாதன் அருள் பெற்றோர்க்கு மங்களம்
சத்திய திருச்சபை தழைக்கவே மங்களம்
தர்மம் ஓங்கிப் பெருகவே மங்களம்
கத்தோலிக் பக்தி பஜனைக்கு மங்களம்
கருதிப்பஜிப்போர் யாவர்க்கும் மங்களம் ஜெயஜெய.

முற்றிற்று.

---

# அறிவிப்பு.

நேயர்களே!

கத்தோலிக் பாலர் பக்திப்பஜனைக் கீர்த்தனங்கள் என்ற இப்புத்தகமானது அடியிற்கண்ட விலாசப்படி நேரிலும் வி. பி. மூலமாயும் பெற்றுக் கொள்ளலாம்.

ஒரு புத்தகத்தின் விலை அணா 0–3–6

6 புத்தகத்துக்கு குறைந்து வி. பி. யில் அனுப்ப முடியாது.
வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

விலாசம்:— T. S. S. ஆரோக்கியசாமி, டீச்சர்.
தோளூர்ப்பட்டி,
தொட்டியம் போஸ்டு,
(*via*) லாலாபேட்டை S. I. R. திருச்சி ஜில்லா.


உ
ஜனோபகார
அச்சுக்கூடம்,
துறையூர்.
எங்களிடம்
பிரிண்டிங், பைண்டிங்
வேலைகள்
குறைந்த சார்ஜில்
செய்து கொடுக்கப்படும்.

